# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 4 | ஜூன் 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 4 | June 10th, 2019 | Annual Subscription Rs. 100/-



## | அரசர் ஆவது எவ்வாறு?



**பகவத் பாதை** தமிழ் மாத இதழ்

தியான பயிற்சிகளின் மூலம் ஏற்படும் ரம்மியமான அனுபவங்கள் நிரந்தரமானவை அல்ல. அவை தற்காலிகமானவையே. ரம்மியமான மனநிலையில் இருந்து பழகி விட்டால் அந்த நிலையில் இருந்து வெளியே வருவதே ஒரு கொடுமையாக மாறிவிடும். மனம் சுய நிலையில் இருப்பது தான் இயற்கையானது. அது தான் ஆரோக்கியமானது. அதுதான் சுதந்திரமானதும் கூட. இந்த நிலையைத்தான் முக்தி நிலை என்று விவரிக்கப்படுகிறது. நம்முடைய மொத்த மனதையும் மனப்பூர்வமாக முழுமனதுடன் அதன் குறை நிறைகளோடு ஏற்றுக்கொள்ள முடிந்தவர்களுக்கு மட்டுமே முக்தி நிலை சாத்தியமாகிறது.

– ஸ்ரீ பகவத்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்கள்

| நாள் | விபரம் | செலவு பகிர்வு |
|---|---|---|
| **15.6.2019** காலை 11.00 மணிமுதல் **16.6.2019** மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்** (ஏற்கெனவே ஞானமுகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்) இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **1000/-** மட்டும். |
| **11.7.2019** காலை 11.00 மணிமுதல் **14.7.2019** மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்** இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **3000/-** மட்டும். |

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


**3.8.2019** காலை 11.00 மணிமுதல் **4.8.2019** மதியம் 3.00 மணிவரை

**ஞான உறுதி முகாம்**

(ஏற்கெனவே ஞான முகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்)

இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம்.

ரூ. **1000/-** மட்டும்.

**15.8.2019** காலை 11.00 மணிமுதல் **18.8.2019** மதியம் 3.00 மணிவரை

**4 நாள் ஞான முகாம்**

இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம்.

ரூ. **3000/-** மட்டும்.

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**



# அரசர் ஆவது எவ்வாறு?



- ஸ்ரீ பகவத்

அன்பர் ஒருவர் கேள்வி ஒன்றை அனுப்பியிருந்தார்:

"நமது உணர்ச்சிகளான சினம், கவலை, பயம் போன்றவை, நம் மனம் உயர் அதிர்வலைகளில் செயல்படுவதன் காரணத்தால் ஏற்படுகின்றன. தவப்பயிற்சியால் நாம் குறைந்த அதிர்வலைகளில் நம் மனதைப் பழக்கிக்கொள்ளும்போது உணர்ச்சி நிலைகளின் தாக்கம் குறைவதைப் பார்க்கமுடிகிறது...

"உயர் அதிர்வலைகளில் ஏற்படும் உணர்ச்சிப் பதிவுகள், குறைந்த அதிர்வலைகளில் ஏற்படுவதில்லை. அதனால் அகத்துக்கு பலன் கிடைக்கத்தானே செய்கிறது? அதனால் தவம் செய்வது நல்லதாகத்தானே உள்ளது?

"நமது மன அலைகள், குறைந்த அலை நீளத்தில் அமையும் பழக்கம் ஏற்பட்டுவிட்டால், நமது அறிவும் சரியான முறையில் நமக்கு வந்து உதவும் வழி ஏற்படுகிறது. உயர் அதிர்வலையில் நம் மனம் செயல்படும்போது புறத்துக்குத் தேவையான அளவில் நம் அறிவு சரியாகச் செயல்படாது என்று எண்ணுகிறேன்."

- இது சம்பந்தமான நமது விளக்கத்தைத் கேட்டிருந்தார்.

தவம் என்றால் என்ன?

தவம் என்னும் வார்த்தை தவங்குதல் என்னும் மூலத்திலிருந்து உருவானதாகும்.

காய்கறியை எண்ணெய்ச் சட்டியில் போட்டு வதக்குகிறோம். அந்தக் காய்கறியும் நாம் வதக்குவதற்கு உடன்பட்டு தன்னை ஒப்புக் கொடுத்துவிடுகிறது.

அது தானாக உடன்பட்டு வதங்குவதற்கு பெயர்தான் தவங்குவது.

இப்படி ஒவ்வொரு சூழ்நிலையிலும், அந்தச் சூழ்நிலையுடன் நம் மனது பங்கு வகிக்கிறது. அதனால் அந்தச் சூழ்நிலையின் தாக்கம் நம் மனதில் பிரதிபலிக்கிறது. சூழ்நிலைக்கு ஏற்ற இன்பதுன்ப உணர்ச்சிகள் நம் மனதில் ஏற்படுகின்றன.

அந்த உணர்ச்சிகள் ஏற்படும் வகையில் நம் மனம் உடன்பாட்டோடு செயல்படுகிறது.

நாம் ஒரு குளிர்ப்பிரதேசத்தில் இருப்பதாக வைத்துக் கொள்வோம்.

நாம் குளிரில் நடுங்கிக் கொண்டிருக்கிறோம். நம் கைகள் குளிரில் விரைத்துப் போய்விட்டன. குளிர் காய்வதற்காக நெருப்பை மூட்டுகிறோம்.

நெருப்பின் அருகில் உட்கார்ந்தால் கதகதப்பாக இருக்கிறது. விலகிச் சென்றால் குளிர் நடுங்குகிறது.

கைகளை நெருப்புக்கு மேல் காட்டுகின்றோம். விரைத்துப் போன கைகளுக்கு இதமாக உள்ளது.

சற்று நேரத்தில் கைகள் சகஜ நிலைக்கு வந்து விடுகின்றன. அதற்கு மேலும் கைகளை நெருப்பின் மீது வைக்க முடியவில்லை.

அதன் பிறகு நெருப்பின் வெம்மைதான் நமது கைகளைப் பாதிக்கிறது.

நமது கைகள் மூன்று விதமான நிலைகளை அனுபவித்திருந்தன.

முதலில் குளிரில் விரைத்துப் போயிருந்தன. பிறகு கதகதப்படைந்து சகஜநிலைக்கு வந்திருந்தன. அதன்பிறகு நெருப்பின் வெம்மையால் பாதிக்கப்பட்டன.

நமது கைகளுடைய இந்த மூன்று விதமான இயக்கத்தில் நம் கைகளுடைய எந்த விதமான இயக்கம் சரியான இயக்கம்?

குளிரில் விரைத்துப்போனதா?

அல்லது கதகதப்பாக இருந்ததா?

அல்லது வெம்மையால் பாதிப்படைந்ததா?

ஒவ்வொரு சூழ்நிலையும் நமது கைகள் அந்தச் சூழ்நிலையோடு உடன்பட்டு அதனால் ஏற்படும் விளைவை பாதிப்பை ஏற்றுக் கொண்டிருந்தது.

நெருப்பைத் தாங்கிக் கொண்டிருந்த பாறையால் ஆன அடுப்பின் நிலை என்ன?

அந்தப் பாறைகள் குளிரில் விரைத்துப் போவதில்லை; நெருப்பின் வெம்மையினாலும் பாதிக்கப்படுவதில்லை.

பாதிக்கப்படாமல் சம நிலையோடு இருக்கும் இந்தப் பாறையின் நிலைதான் தவநிலையா?

அல்லது, குளிராலும், வெம்மையாலும் பாதிப்பை அடைந்திடும் நமது கைகளின் நிலைதான் தவநிலையா?

இவற்றுள் தவநிலை என்பது எது?

பாதிக்கப்படும் இந்நிலைதான் தவநிலையா?

அல்லது பாதிக்கப்படாத சமநிலைதான் தவநிலையா?

தவங்குதல் என்பது பாதிப்பை தான் குறிக்கின்றது. பாதிக்கப்படாத பாறையைக் குறிப்பிடவில்லை.

நமது கையானது குளிராலும், வெப்பத்தாலும் பாதிப்படைகிறது. அது இயற்கையானது.

நமது கையானது குளிராலும், நெருப்பாலும் பாதிப்படையாத பாறையைப் போன்று மாறிவிட்டது என்றால் அது இயற்கையானது அன்று. அது செய்கையானதே.

இவ்வாறு நமது மனதையும் இன்ப துன்பப் பாதிப்புகளின்றி சமன்படுத்தி வைக்க முடியுமா?

சூழ்நிலையின் தாக்கங்கள் நம் மனதைத் தாக்காதவாறு நம் மனதை எப்போதும் அமைதியோடும், மகிழ்ச்சியோடும் வைத்துக் கொள்ள முடியுமா?

பயிற்சிகளின் மூலம் மன இயக்கத்தைக் கட்டுப்படுத்தி வைப்பதுதான் இது.

இது இயற்கையானது அல்ல; இது செயற்கையானதுதான்.

ஆனால் இத்தகைய பயிற்சிகள் சாத்தியமானவைதானா?

சாத்தியமே; இத்தகைய பயிற்சிகள் நிச்சயம் சாத்தியமானவையேதான்.

என்னைப் பொருத்தவரையிலும் நான் எத்தனையோ விதமான பயிற்சி முயற்சிகளில் ஈடுபட்ட அனுபவங்கள் எனக்கும் உண்டு.

நல்ல விதமான பயிற்சிகள் நல்லவிதமான அனுபவங்களைக் கொடுக்கத்தான் செய்தன. அந்த அனுபவங்கள் யாவும் அந்தப் பயிற்சிகளின்மீது ஆர்வத்தை அதிகப்படுத்தின.

பயிற்சிகளும், அதனால் ஏற்படும் அனுபவங்களும் நன்றாகவே இருந்தன.

எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் எவையும் கற்பனை கிடையாது, அவை அனைத்தும் அனுபவ பூர்வமான – நிதர்சனமான உண்மைகளாகும்.

தியானப் பயிற்சிகளில் எப்போதும் ஈடுபட முடியாது. அமைதியான சூழ்நிலையில், நல்ல மன நிலையில் இருக்கும்போது தான் தியானப் பயிற்சிகளில் ஈடுபடமுடியும்.

அப்படி ஈடுபடும்போது மனம் ரம்மியமான அனுபவங்களுக்குள் போய்விடும்.

அந்த ரம்மியமான மன அனுபவங்கள் சில மணி நேரங்கள் நீடிக்கும். சில சமயங்களில் அவை சில நாட்கள் கூட நீடிக்கும். பிறகு அந்த நிலை நம்மை விட்டுப் போய்விடும்.

ஏசி அறையிலிருந்து பழகிவிட்டால் பிறகு ஏசி இல்லாமலிருப்பதே ஒரு கொடுமையாகப் போய்விடும்.

ரம்மியமான மனநிலையிலிருந்து பழகிவிட்டால் அந்த நிலையிலிருந்து வெளியே வருவதே ஒரு கொடுமையாக மாறிவிடும். மீண்டும் மீண்டும் அந்த ரம்மியமான மனநிலையிலேயே மூழ்கிக் கிடக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தமும் நமக்குள் ஏற்பட்டுவிடும்.

அந்த ரம்மியமான மனநிலை என்பது நமது இயற்கையான நிலையல்ல. அது நமது முயற்சியால் உருவாக்கப்பட்ட ஒரு செயற்கையான நிலையே.

இந்த செயற்கையான நிலை நம்முடைய ஆபத்துக் காலத்திலாவது நமக்குப் பயன்படுமா?

துப்பாக்கியால் சுடுவதற்கு ஒருவர் பயிற்சி எடுக்கிறார். குறிபார்த்துச் சுடுவதில் தேர்ச்சி பெற்ற அவர் அதற்கான போட்டிகளில் வென்று வெற்றிப் பதக்கங்கள் பலவற்றையும் பெறுகிறார்.

ஒருநாள் நள்ளிரவில் அவர் வீட்டினுள் திருடன் ஒருவன் கத்தியுடன் நுழைந்து வீட்டினரை மிரட்டுகிறான்.

அவனை எதிர்கொள்ளும் நோக்கில் அவர் துப்பாக்கியை எடுக்கிறார். ஆனால் பயத்தில் அவரது கைகளெல்லாம் நடுங்குகின்றன. அவர் அந்தத் துப்பாக்கியையும் அந்தத் திருடனிடமே ஒப்படைத்து விடுகிறார்.

"ஏன் அப்படி நடந்து கொண்டீர்கள்?" என்று பிறகு அவரிடம் வீட்டினுள்ளவர்கள் கேட்கிறார்கள்.

அதற்கு அவர், "துப்பாக்கி சுடும் மைதானத்தில்தான் என்னால் துப்பாக்கியைக் கையாள முடியும். அப்படிதான் நான் பயிற்சி எடுத்துள்ளேன்," என்று கூறிவிடுகிறார்.

தியானப் பயிற்சிகளுடைய நிலையும் இத்தகையதுதான். பிரச்சினையான சூழ்நிலையில் நம்மால் தியானமுயற்சிகளில் ஈடுபட முடியாது. பிரச்சினைகளை எதிர்கொள்ளும் போது, நாம் உருவாக்கி வைத்திருந்த நமது ரம்மியமான மனநிலையும் நம்மை விட்டுவிட்டுப் போய்விடும்.

எனது தியான முயற்சிகளின் ஆரம்ப கால கட்டத்தில் என்னுடைய அனுபவங்கள் இவ்வாறுதான் இருந்தன.

ஆனால் காலப்போக்கில் எனது தியானப் பயிற்சிகள் இத்தகைய அரைகுறையான பலன்களைக் கொடுக்காமல் முழுமையான பலனை வாரி வழங்க ஆரம்பித்தன.

விளைவாக எனது மனதில் பரவசநிலைகள் பொங்கி வழிந்தோட ஆரம்பித்தன. 24 மணி நேரமும் அந்தப் பரவச நிலை என்னிடமே நீடித்து வந்தது.

நான் அந்தப் பரவசநிலையைப் பிடித்ததைவிட அதுதான் என்னை அழுத்திப் பிடித்துக் கொண்டுவிட்டது.

நாட்கணக்கில் நீடித்த அந்தப் பரவச நிலை மாதங்கள் பல ஆகியும் என்னைவிட்டுப் போக மறுத்துவிட்டது.

அந்தப் பரவசநிலையின் வீரியமும் நாளுக்கு நாள் கூட ஆரம்பித்தது.

அன்றைய நாட்களிளெல்லாம் எனது வாழ்க்கையே வசந்தகாலமாகத்தான் இருந்தது.

உலகம் முழுமையுமே ஏசி அறைக்கு வந்து விட்டதுபோல் இருந்தது.

அந்த நிலையில் எந்தப் பிரச்சினைக்கும் என்னை வாட்டும் வல்லமை இல்லாமலிருந்தது.

பிரச்சினைகள் இல்லாமலில்லை. ஆனால் எந்தப் பிரச்சினையும் என்னைத் தாக்கவில்லை.

என் மீது ஏய்யப்பட்ட அம்புகள் அனைத்தும் மலர்களாக மாறி என்னை வருடிக் கொடுத்தன.

இந்த அனுபவத்தை இரமணர் கூட அவருடைய வார்த்தைகளில் கூறியிருப்பார்.

"துக்கம் எதுவும் துக்கமாகத் தெரியாது. அதுவும் ஆனந்தமாகவே தெரியும். அது துக்கமல்ல; துக்கானந்தம்" - என்று கூறியிருப்பார்.

எல்லா அனுபவங்களும் ஆனந்த அனுபவங்களாகவே வெளிப்படும்.

அது மாதங்களைக் கடந்து வருடம் ஒன்றைத் தாண்டும்போதுதான் அந்தப் பரவச நிலையின் சுயரூபம் வெளிப்பட்டது.

பரவச நிலையில் நிரந்தரமாக நீடித்திருப்பதானது உடல் நலத்தைப் பாதிக்க ஆரம்பித்தது.

பரவச நிலையின்போது வித்தியாசமானதொரு இரசாயனம் நமது உடலில் சுரந்து அதன் விளைவாகத்தான் அந்தப் பரவச உணர்வே நமக்கு ஏற்பட்டிருந்திருக்கிறது.

அந்த இரசாயணம் அளவுக்கு அதிகமாகச் சுரந்ததன் விளைவாக உடல் நலமும் பாதிக்கப்பட்டிருப்பது தெரிந்தது.

அதுவரையிலும் பரவச நிலையில் நிரந்தரமாக வீற்றிருப்பதுதான் ஆன்மிகத்தின் உயர்ந்தநிலை. அதுதான் நாம் அடைய வேண்டிய ஞானநிலை.

- என்ற எண்ணம் எனக்கு இருந்தது.

அந்த நிலையை நிரந்தரமாக அடைந்தபிறகுதான் அதனுடைய உண்மைத் தன்மையைப் புரிந்துகொள்ள முடிந்தது.

அதன்பிறகு அந்தப் பரவச நிலையிலிருந்து வெளிவருவது எவ்வாறு என்பதைக் கண்டுபிடிக்க வேண்டிதாயிற்று.

பொதுவாக ஆன்மிக உலகில் ஞானநிலை என ஒன்றை அனைவரும் பேசுகின்றனர். அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பது புரிந்தும் புரியாமலுந்தான் புரிகிறது.

அப்படிப் புரிந்து கொண்ட வரையில் எப்போதும் பரவசநிலையில் இருந்து கொண்டு, வாழ்க்கையை மகிழ்வுடன் எதிர்கொள்வதுதான் ஞானநிலை என்று எண்ணியிருந்தேன்.

என்னுடன் சேர்ந்து ஆன்மிகத் தேடுதலில் பங்குபெற்ற எனது அக்கால நண்பர்களும் இந்த முடிவில்தான் இருந்தார்கள்.

ஆன்மிகத்தின் சிகரமாக எதைக் கருதியிருந்தேனோ அந்தச் சிகரத்தையும் அடைந்தாகிவிட்டது. அதன் பிறகுதான் தெரிந்தது நாம் அடைய வேண்டிய இடம் அதுவல்ல என்பது.

அதன்பிறகுதான் தெரிந்தது நாம் அடையவேண்டியது சிகரங்களை அல்ல சமவெளியைத்தான் என்பது.

மனோலயங்கள் யாவும் நல்ல மன அனுபவங்களை வழங்கத்தான் செய்கின்றன.

ஆனால் லயங்களைப் பொருத்த அளவில் விரும்பிய லயங்களும் விரும்பாத லயங்களும் மாறி மாறிவருவதுதான் இயற்கை.

நல்ல லயங்களை கட்டிபிடித்து நிலை நிறுத்துவதற்காக முயலுவோமேயானால் நமது அகப் போராட்டம் நம் வாழ்நாள் முழுவதுமே தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

மனோலயங்கள் எந்த அளவு முக்கியமோ அந்த அளவு முக்கியம் அந்த லயங்கள் யாவும் கலைந்திடுவதுதான்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் என மும்மூர்த்திகளைப் பற்றிக் கூறுவார்கள். படைத்தல் பிரம்மாவின் தொழில் என்றும் காப்பாற்றுதல் விஷ்ணுவின் தொழில் என்றும் அழித்தல் சிவனுடைய தொழில் என்றும் கூறுவார்கள்.

ஓர் உயிரை உருவாக்குவதையும் அந்த உயிரை வாழ வைப்பதையும் உயர்ந்தவை என்று கூறுலாம். ஆனால் ஓர் உயிரை அழிப்பதை எப்படி உயர்ந்தது என்று கூறமுடியும்?

மும்மூர்த்திகளிலும் சிவனையே உயர்ந்த மூர்த்தி என்று கூறுவாரும் உண்டு.

அழிப்பதை எப்படி உயர்ந்ததாகக் கூற முடியும் என்ற சந்தேகம் எனக்கு வெகு நாட்களாக இருந்து வந்தது.

மனோலயங்கள் கலைத்திடுவதுதான் முக்திநிலை என்பது தெரிந்த பிறகுதான், அழிப்பவர் எப்படி உயர்ந்தவர்களாக முடியும் என்ற கேள்விக்கு விடை கிடைத்தது.

மனதின் லயங்களைக் கலைத்திடுவதற்கு நாம் முயற்சி கூடச் செய்யத் தேவையில்லை. அது இயற்கையாகவே கலைந்திடுகின்றது.

ஒரு லிட்டர் தண்ணீரை டம்ளர்களில் ஊற்றினோமென்றால் அந்தத் தண்ணீரானது ஊற்றப்பட்ட டம்ளர்களின் வடிவை எடுத்துவிடுகிறது,

டம்ளரில் ஊற்றப்பட்ட தண்ணீரை வேறு ஒரு ஜாடிக்கு மாற்றினோமென்றால் அந்தத் தண்ணீர் ஜாடியின் வடிவத்தை எடுத்துக் கொள்கிறது.

தண்ணீர் நிரப்பப்பட்ட டம்ளர்களை பிரிஜ்ஜில் வைத்துக் குளிரூட்டுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது அந்த நீர் உறைநிலைக்குப் போய்விடும்.

டம்ளர் வடிவிலுள்ள உறைந்த நீரை வேறு பாத்திரத்துக்கு மாற்றினோமென்றால் அது தனது உருவை பாத்திரத்தின் வடிவத்துக்கு மாற்றிக் கொள்ளாது.

நமது மனமும் இளகிய நீரைப்போல் இயற்கையாக இருப்பதுதான் ஆரோக்கியமாகும்.

மனம் சுயநிலையில் இருப்பதுதான் இயற்கையானது; அதுதான் ஆரோக்கியமானது.

அதுதான் சுதந்திரமானதும் கூட. அது தான் முக்திநிலையென்று விவரிக்கப்படுகிறது.

நம்முடைய மொத்த மனதையும் மனப் பூர்வமாக முழுமனதுடன் அதன் குறை நிறைகளோடு ஏற்றுக் கொள்ள முடிந்தவர்களுக்கு மட்டுமே இந்த முக்திநிலை சாத்தியமாகின்றது.

முக்திநிலை என்பது நாம் போராடி வெற்றி கொண்டநிலையல்ல.

நமது இயலாமையை ஒத்துக் கொண்டு சரணாகதி அடைந்த நிலைதான் இது. உண்மையில் தவம் என்பது கூட சரணாகதியையே குறிப்பிடுகிறது. யோக சாதனைகள் என்று பலரும் குறிப்பிடுவது தவமே அல்ல. அவை அனைத்தும் தாந்த்ரீக சாதகைள் மட்டுமே. தாந்த்ரீக சாதனைகள் மனோயலங்களை மட்டுமே வழங்குகின்றன. மனோலயங்களும் உயர்ந்தவை தான். அவை மந்திரிப் பதவிகளைக் கொடுக்கின்றன. ஆனால் மனோலயநாசம் என்னும் முக்தி நிலையானது மன்னர் பதவியையே உங்களுக்கு வழங்குகிறது. ★



V.A.S. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## "நல்லது செய்பவர்கள் கஷ்டப்படவதும் கெட்டது செய்பவர்கள் நன்றாக இருப்பதும் ஏன்?"

**கேள்வி :** என் வாழ்க்கையில் எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் இன்றுவரை நான் யாருக்கும் எந்த தீங்கும் செய்ததில்லை. என்னால் முடிந்த வரை மற்றவர்களுக்கு உதவி தான் செய்திருக்கிறேன். ஆனாலும் என்னுடைய வாழ்க்கையில் நான் அனுபவித்து வரும் துன்பம் தாங்க முடியாத அளவிற்கு இருக்கிறது. நான் மற்றவர்களுக்கு நல்லதுதானே செய்து வருகிறேன்? எனக்கு ஏன் எந்தப் பலனும் கிடைக்கவில்லை?

மோசமான செயலை செய்யும் பலர் மிகவும் நன்றாக இருக்கிறார்கள். இது ஏன்?

நான் செய்கின்ற நல்ல கர்மாவின் பலனை எப்படித்தான் உணர்ந்து கொள்வது? இங்கே கர்மா தத்துவம் எப்படி செயல்படுகிறது?

என்னுடைய இன்றைய நிலைக்கு முற்பிறவியில் நாம் செய்த கர்ம வினைகள் தான் காரணமா? நான் செய்கின்ற நல்ல கர்மாவால் என் தலைவிதியை மாற்ற முடியாதா? விளக்கம் தேவை.

**பதில் :** "வினைப்பதிவே தேகம் கண்டாய்" என்பது சான்றோர் சொல். வினை பதிவான கர்மவினையின் காரணமாகவே நாம் இப்பிறவியில் உடலெடுத்து வந்துள்ளோம்.

நல்ல கர்மாவை செய்தால் நல்ல சூழ்நிலை தான் ஏற்படும் என்றோ மோசமான கர்மாவை செய்தால் மோசமான சூழ்நிலை தான் ஏற்படும் என்றோ நாம் அதிகாரப் பூர்வமாகவும் ஆய்வின் மூலமாகவும் நிரூபிக்க முடியாது. இருப்பினும் தர்ம சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டே நமது கருத்துக்களை இங்கே தெரிவிக்கிறோம். ஆதலால் சாஸ்திரங்களின் மீதுள்ள நம்பிக்கையின் அடிப்படையில் நாம் நல்ல செயல்களை ஒரு விரதமாகவே எடுத்து செய்வது ஒன்றே ஒரு நல்ல எதிர்காலத்திற்கான வழி.

மேலும் நாம் இப்போது செய்யும் நல்ல கர்மாவுக்கு இப்போதே உடனடியாக நமக்கு நன்மை ஏற்படுவதாகவும், நாம் இப்போது செய்யும் தீய கர்மாவிற்கு இப்போதே உடனடியாக நமக்கு துன்பம் ஏற்படுவதாகவும் வைத்துக் கொள்வோம். நாம் அனைவரும் எப்படி செயல்படுவோம்? துன்பத்திற்கு பயந்து அதாவது மோசமான கர்மாவுக்கு உடனே கிடைக்கும் தண்டனைக்கு பயந்து நல்லது செய்வோம்.

இங்கு நமது செயலுக்கான சுதந்திரம் என்பதே இல்லாமல் போய்விடுகிறது.

நல்ல கர்மா செய்வது என்பது நமது விருப்பத்தின் பேரில் சுதந்திரமாக செய்வதாக இருக்க வேண்டும். அதுதான் புண்ணிய கர்மா. கட்டாயத்தின் பேரில் தண்டனைக்கு பயந்து செய்வதாக இருப்பது சரியானதல்ல. நாம் நமது விருப்பத்தின் பேரில் இப்படி சுதந்திரமாக செயல்படுவதுதான் ஆகாமிய கர்மாவாகும்.

நாம் இப்பிறவியில் அனுபவிக்க வேண்டியது பிராரப்த கர்மாவின் பலனைதான். பிராரப்த கர்மாவால்




நமக்கு ஏற்படும் சூழ்நிலையை ஆகாமிய கர்மாவை கொண்டு எதிர்கொள்கிறோம். நமது ஒட்டுமொத்த கர்மாவை சஞ்சித கர்மா என்றும் இப்பிறவியில் அனுபவிப்பதற்கு சஞ்சித கர்மாவிலிருந்து கொண்டு வந்த ஒரு பகுதியைதான் பிராரப்த கர்மா என்றும் அழைக்கின்றோம்.

அப்படி நாம் சுதந்திரமாக செயல்படும் ஆகாமிய கர்மாவை நல்ல கர்மாவாக செய்வதால் ஏற்படும் பலன்களை எப்படி உணர்ந்து கொள்வது என்பதைதான் இங்கு புரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம்.

இனி இதை எப்படி உணர்ந்து கொள்வது என்பதை ஒரு கணக்குப் பாடத்தை வகைப்படுத்திப் புரிந்து கொள்வதைபோல் புரிந்துகொள்வோம். பொதுவாக நாம் செய்வது இரண்டு வகையான கர்மாக்களை தான். ஒன்று நல்ல நோக்கத்துக்காக நாம் செய்கின்ற நல்ல செயல் - புண்ணிய கர்மாவாகும். மற்றொன்று கெட்ட நோக்கத்திற்காக செய்கின்ற மோசமான செயல் - பாவ கர்மாவாகும். நல்ல கர்மாவை **பிளஸ் கர்மா** என்றும் பாவ கர்மாவை **மைனஸ் கர்மா** என்று வைத்துக் கொள்வோம்.

ஒருவர் எவ்வளவு மைனஸ் கர்மா வைத்திருக்கிறார், எவ்வளவு பிளஸ் கர்மா வைத்திருக்கிறார்

என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் அவர் வாழ்க்கையில் அனுபவிக்கும் இன்பத் துன்ப அளவினைப் பொறுத்து அவர் முந்தைய பிறவியில் எவ்வளவு பாவ புண்ணியம் சேர்த்து வைத்திருக்கிறார் என்பதை ஓரளவு ஊகிக்க முடியும்.

உதாரணமாக ஒருவருக்கு ஏற்படும் சூழ்நிலைகள் அனைத்தும் நல்லவிதமாகவே அமைந்தால் அவர் பிளஸ் கர்மாவை அதிகம் வைத்திருக்கிறார் என்று எடுத்துக் கொள்ளலாம். அதேபோல் ஒருவருக்கு அவருடைய வாழ்வில் மோசமான சூழ்நிலையே ஏற்பட்டு கொண்டிருந்தால் அவர் மைனஸ் கர்மாவை நிறைய வைத்திருக்கிறார் என்று எடுத்துக் கொள்ளலாம்.

பொதுவாக நாம் எல்லாருமே நமக்கு நடக்கும் நல்ல காரியங்களுக்கு நாம் செய்த புண்ணிய கர்மா-தர்மம் தான் காரணம் என்பதை ஏற்றுக்கொள்கிறோம்.

உதாரணமாக **95%** மைனஸ் கர்மாவை கொண்டுள்ள ஒருவர் இப்பிறவியில் யாருக்கும் துன்பம் அளிக்காமல் தனது ஆகாமியத்தை முடிந்தவரை நல்ல கர்மாவாக செய்து வருவதாக வைத்துக் கொள்வோம்.

அப்படி எனில் அவர் தற்போது அனுபவிக்க வேண்டிய கர்மாவின் நிலை என்ன? அனுபவிக்க வேண்டிய **95%** மைனஸ் கர்மாவின் ஆதிக்கம் குறைந்து அவர் தற்போது செய்து கொண்டிருக்கும் பிளஸ் கர்மாவுக்கு தகுந்தார்போல் **60%** ஆகவோ **50%** ஆகவோ குறைந்து விடும்.

இப்படி மைனஸ் கர்மா **95%** சதவீதத்தில் இருந்து **50%** சதவீதமாக குறைந்ததை அவரால் உணர முடியுமா?

நிச்சயமாக உணர முடியாது. அவரிடம் எவ்வளவு மைனஸ் கர்மா இருக்கிறது என்பது அவருக்கே தெரியாது.

நாம் நினைத்தபடி நடக்கும் நல்ல செயலுக்கு நாம் செய்த புண்ய கர்மா தான் காரணம் என்பதை நாம் அனைவருமே ஏற்றுக் கொள்வோம்.

அதேபோல் நாம் அனுபவிக்க வேண்டிய மைனஸ் கர்மாவின் அளவு குறைந்திருப்பதை நம்மால் உணர்ந்துகொள்ள முடியுமா?

பிறகு எப்படித்தான் நாம் செய்யும் நல்ல கர்மாக்களின் பலனை உணர்ந்து கொள்வது?

வாழ்க்கையில் ஒருவருக்கு எவ்வளவோ பாதிப்புகளும் துன்பங்களும் ஏற்பட்டாலும்கூட அவற்றையெல்லாம் கடந்து மீண்டும் அவர் நல்ல நிலைக்கு திரும்பு வதை வைத்து அந்த ஒருவரால் தனிப்பட்ட முறையில் உணர்ந்து கொள்ள முடியும்.

உதாரணமாக மகாபாரதத்தில் கர்ணன் நாகாஸ்திரத்தை அர்ஜுனனை கொல்லும் நோக்கில் ஏவி விடுவான். அர்ஜுனன் நாகாஸ்திரம் தன்னை கொன்று விடும் என்று பயந்து கிருஷ்ணனிடம் சரண் புகுந்து விடுவான். தேரோட்டியான பகவான் கிருஷ்ணர் தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டு தேரை கொஞ்சம் அழுத்தி பிடிக்க அர்ஜுனனின் கிரிடத்தை நாகாஸ்திரம் தட்டிப் பறித்து கீழே தள்ளிவிடும் இதைத்தான் "தலைக்கு வந்தது தலை பாகையோடு சென்றது" என்பார்கள் பெரியவர்கள்.



இதைப் போன்று நாம் அனுபவிக்க வேண்டிய மைனஸ் கர்மாவின் வீரியத்தை நாம் செய்த நல்ல அகாமிய கர்மாவின் பயனால் குறைத்து கொள்ள முடியும். ஆனால் உணர முடியாது. "ஒருவர் தன்னுடைய வாழ்க்கையில் அனுபவிக்கும் மோசமான கர்மாவின் தாக்கத்தை குறைத்துக் கொள்ள ஆகாமிய கர்மாவை ஒரு விரதமாக எடுத்து செயல்படுவது ஒன்று மட்டும் தான் தீர்வு" என்று பகவத் ஐயா அவர்கள் ஆகாமிய கர்மா என்ற நூலில் குறிப்பிடுகிறார்கள்.

ஒருவனுக்கு தன்னுடைய பழைய மோசமான கர்மாவின்படி ஒரு மிகப் பெரிய விபத்தை சந்திக்க வேண்டியுள்ளதாக வைத்துக் கொள்வோம். அவன் செய்த நல்ல ஆகாமிய கர்மத்தின் பயனால் ஏதோ ஒரு சிறு எலும்பு முறிவுடன் விபத்து முடிகிறது என்றால் அவன் செய்த நல்ல காரியங்கள்தான் அதற்குக் காரணம். பெரிய விபத்து சிறியதாக மாறியதை நாம் உணர்வதில்லை. "இந்த சிறிய விபத்து கூட எனக்கு ஏன் நிகழ்ந்தது?" என்றுதான் நாம் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறோம். உண்மையில் நிகழ வேண்டிய பெரிய விபத்து சிறியதாக மாறியிருப்பதை நம்மால் உணர முடியாமையே இதற்குக் காரணம்.

எப்படியெல்லாம் சுற்றி வளைத்து சிந்தித்து பார்த்தாலும் நாம் புரிந்து கொள்ள வேண்டிய உண்மை **இயற்கை ஒருபோதும் நமக்கு தவறு செய்வதே கிடையாது.** நமக்கு எப்போதும் உதவியே செய்கிறது என்பதுதான் உண்மை. நாம் இயற்கையை சரியாக புரிந்து கொள்ளாததால் பிரச்சினையில் சிக்கி தவித்துக் கொண்டிருக்கிறோம்.



மேலும் அதே கர்ணன் கதாபாத்திரத்தில் கடவுளான கிருஷ்ணரால் கூட எவ்வளவு முயன்றும்

கர்ணனை கொல்ல முடியாது. காரணம் கர்ணன் செய்த புண்ணிய கர்மாவினால் அவனைகொல்ல முடியவில்லை என்பதை கிருஷ்ணர் புரிந்து கொள்வார். அப்பொழுது அவர் ஓர் உயர்ந்த தர்ம சத்தியத்தை கூறுவார். "படைத்தவனின் வலிமையும் கூட தர்மத்தின் முன் பலிக்காது" என்பார். புண்ணிய கர்மாவின் மகத்துவத்தை மனிதகுலம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காக கடவுளாகிய கிருஷ்ணர், கர்ணன் என்ற மனிதனிடம் இருந்து "உன்னுடைய புண்ணிய கர்மாவை எனக்கு தாரைவார்த்துக் கொடு" என்று கேட்டு பெற்றுக்கொள்வதாக காட்சி அமைக்கப்பட்டிருக்கும். மனிதன் கொடுக்க கடவுள் பெற்றுக் கொள்வது ஒன்றே போதும், ஆகாமிய கர்மாவின் சிறப்பை உணர்ந்து கொள்வதற்கு. பிறகு கிருஷ்ணர் கர்ணனுக்கு தன்னுடைய விஸ்வரூபத்தை காட்சியளித்து ஆட்கொள்வதாக கதை முடியும்.

நமது பழைய கர்மா எப்படி இருந்தாலும் அது நமக்கு தெரிய போவதில்லை. நம் வாழ்வை, நமது தலையெழுத்தை மாற்றி அமைக்க நம்மிடம் உள்ள ஒரே வாய்ப்பு நாம் செய்யும் ஆகாமிய கர்மாதான். அந்த ஆகாமியத்தை நாமாகவே முன்வந்து ஒரு விரதமாக எடுத்து செய்வது ஒன்று மட்டுமே நல்ல எதிர்காலத்திற்கான வழி. இப்படி நாமாக நல்ல காரியங்களை எடுத்து செயல்படுவதினால் மட்டுமே நமது வாழ்க்கையில் மாற்றம் ஏற்பட முடியும். நம் நல்வாழ்க்கைக்கு அதுவே என்றும் ஆதாரம்.

**நம் தலையெழுத்தை மாற்றி அமைக்கும் மாபெரும் சக்தி நம்மிடம் உள்ள ஆகாமிய கர்மா மட்டுமே.**

# ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்

## (ஞானிகளுக்காக எழுதப்பட்ட நூல்)




இந்நூலின் முதற்பதிப்பு 2013-ல் வெளியிட்டிருந்தோம். இந்நூலின் இரண்டாம் பதிப்பில் சில அத்தியாயங்களை இணைத்து புதுப்பித்து 2019 மே மாதம் வெளியிட்டு இருக்கிறோம். இந்நூல் விடுதலை அடையாதவர்களுக்கு எழுதப்படடதன்று. விடுதலை அடைந்தவர்களுக்காக மட்டுமே எழுதப்பட்டது.

விடுதலை அடைந்தவர்கள் அனைவரும் தங்களுக்கே சுயவிளக்காக இருப்பவர்கள். அவர்களுக்கு நெறிமுறைகளை வகுத்துக் கூறும் அதிகாரம் எவருக்கும் கிடையாது. அதற்கு இந்நூலும் விதிவிலக்கல்ல. "இந்நூலானது ஒரு குருநாதர் தனது சீடர்களுக்கு எழுதப்பட்ட நூல் அன்று. ஒரு சீடன் தனது குருநாதருக்கு எழுதப்பட்டதாகவோ அல்லது ஒரு குருநாதர் மற்ற குருநாதருக்கு எழுதப்பட்டதாகவோ மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று ஸ்ரீ பகவத் ஐயா குறிப்பிடுகிறார். ஒவ்வொருவரும் தங்களுக்கென ஒரு அணுகுமுறையை வைத்து இருப்பதில் எந்தத் தவறும் கிடையாது. "விடுதலை பெற்ற ஒருவர் இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும், இப்படி நடந்து கொள்ளக் கூடாது" என்ற ரீதியில் இந்த நூலில் பல விதமான கருத்துக்கள் விவரிக்கப்பட்டு இருக்கலாம். நூலின் நியதிப்படி, அவையாவும் நிபந்தனைகள் போன்று விவரிக்கப்பட்டு இருந்தாலும் அவைகள் எவையும் நிபந்தனைகள் கிடையாது.

அவை அனைத்தையும் விடுதலை பெற்றவர்கள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய விண்ணப்பமாகவே எடுத்துக் கொள்ள வேண்டுகிறோம். **ஞானத் தெளிவடைந்தவர்களுக்காக மட்டுமே இந்த நூலில் எழுதப்பட்டு இருப்பதால் சில விபரங்கள் வெளிப்படையாக இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்த விபரங்கள் யாவும் தெளிவடையாதவர்களிடம் தேவையற்ற குழப்பத்தை ஏற்படுத்தி விட ஏதுவாகிவிடும்.**

ஆகவே வேறு வழியின்றி இந்நூலின் விநியோகத்திற்காக சில கட்டுப்பாடுகளையும் ஏற்படுத்த வேண்டியதாகி விட்டது. ஆகவே இந்த நூலை பெற விரும்புபவர்களுக்கு அவர்கள் விண்ணப்பத்தின் அடிப்படையிலேயே வழங்கப்படுகிறது. விண்ணப்பத்தை ஆன்லைனில் பெற **www.sribagavath.org**

விண்ணப்பத்தை தபாலில் பெற **ஸ்ரீ பகவத் மிஷனை** தொடர்பு கொள்ள வேண்டுகிறோம். ஞானத் தெளிவு பெற்றவர்கள் இந்நூலை வாங்கிப் படித்து பயன்பெறலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

ஆன்மிகத்தின் மிக உயர்ந்த நிலை விடுதலை - முக்தி.

இந்த விடுதலையை கொடுக்கக்கூடிய புரிதலை தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

ஞானத்தை பெறுவதற்காகத்தான் ஆன்மிகத்தில் உள்ள பலரும் முயன்று வருகிறார்கள்.

இதுவரை விடுதலை பெற்ற ஞானிகள் கூட மற்றவர்களுக்கு விளக்கிக் கூறும் போது அது ஒரு புரியாத புதிராகவே அமைந்துவிடுகிறது.

இதுவரை வந்த பல ஞானிகளால் ஞானத்திற்காக கொடுக்கப்பட்ட சூத்திரம் (Formula) புரிந்து கொள்வதற்கு மிகவும் சிரமமானதாகும் கடுமையானதாகவும் அமைந்துவிட்டது.

கணிதமேதைகளால் கூட புரிந்து கொள்ள முடியாத கணித சூத்திரம் (Formula) போல் மனோதத்துவம் பயின்றவர்களாலும் மனதைப் பற்றி பல ஆராய்ச்சி செய்தவர்களாலும் மனதை தீவிர பயிற்சி முயற்சிக்கு உட்படுத்தியவர்களாலும் கூட புரிந்துகொள்ள முடியாத சூத்திரமாக ஞானம் இருந்து வந்துள்ளது.

இவ்வுலகில் முதன்முறையாக, இதுவரை யாருமே அணுகாத புதிய கோணத்தில், பள்ளி மாணவர்கள் கூட புரிந்து கொண்டு ஞானம் பெறும் வகையில் இச் சூத்திரத்தை (Formula) மிகவும் எளிமையாக்கி அறிவியல் ரீதியாக வழங்கியவர் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்.

இந்தப் புரிதலை பெற்ற அனைவருமே விடுதலை இயக்கத்திற்கு தாமாகவே வந்துவிடுவார்கள்.

அந்த வகையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் தெளிவு பெற்றவர்கள் பலர் இருக்கிறார்கள்.

இப்படி தெளிவு பெற்ற அவர்கள் அனைவருமே அவர்களுக்கு அவர்களே சுய விளக்காக ஆகிவிடுகிறார்கள். இருப்பினும் இன்னும் பல கோடி அன்பர்களை இந்த ஞானம் சென்றடைய வேண்டி உள்ளது.

அந்தப் பணியைத் தான் நமது ஸ்ரீ பகவத் மிஷனும் பகவத் பாதையும் செய்து கொண்டிருக்கிறது.

அந்த வகையில் மே மாதம் நடைபெற்ற ஏற்காடு ஞான முகாமை தொடர்ந்து ஜூன் மாதம் ஒன்றாம் தேதி முதல் நான்காம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் ஒரு நான்கு நாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இதில் பலர் கலந்துகொண்டு பயனடைந்தனர். Youtube வழியாக அய்யாவின் உரையைக் கேட்டு சிங்கப்பூர் மற்றும் மலேசியாவில் இருந்து கூட சில அன்பர்கள் வந்து கலந்து கொண்டு பயனடைந்தனர்.

இதனைத் தொடர்ந்து ஞான முகாமில் கலந்துகொண்ட அன்பர்களுக்கான ஞான உறுதி முகாம் ஜூன் மாதம் 15 ஆம் தேதி மற்றும் 16 ஆம் தேதிகளில் நடைபெற உள்ளது.

வாய்ப்புள்ளவர்கள் கலந்து பயனடைய வேண்டுகிறோம்.

பயனடைந்தவர்கள் மற்றவர்களுக்கும் தெரியப்படுத்தி அவர்களையும் பயனடையச் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

ஞானம் உலகெங்கும் ஒலிக்கட்டும்! விடுதலை அனைவரின் உள்ளத்திலும் ஒளி வீசட்டும்!!









பாறை சீரமைப்பு பணியில்

# ஜென் கதை

## "அலையை எதிர்க்காதே"

நடுத்தர வயது குடும்பஸ்தன் ஒருவன் இருந்தான். அவன் பொருளாதாரத்தில் மிகவும் பின் தங்கி இருந்தான். அவனால் தொழிலில் முழுமையாக ஈடுபட முடியவில்லை. அவனுக்கு முன்பு ஏற்பட்ட பல அவமானங்களும் மன பாதிப்புகளும் அவனை அடிக்கடி வாட்டி வதைத்தன. இதனால் மிகவும் தாழ்வு மனப்பான்மையுடன் இருந்து வந்தான்.

தனக்கு ஏற்பட்ட மன பாதிப்புகளிலிருந்தும் அவமான உணர்வுகளிலிருந்தும் வெளிவர முடியாமல் மிகவும் போராடினான். ஆனால் முடியவில்லை.

இவைகள் இவனை வெளி வேலைகளை செய்ய விடாமல் தடுத்தன. சதா மனப்போராட்டத்தில் இருப்பதால் வாழ்வில் நிம்மதி இன்றி தவித்து வந்தான். இதுவே அவன் முன்னேற்றத்திற்கு தடையாகவும் இருந்தது.

இவன் "எல்லோரும் நன்றாக இருக்கிறார்கள். தான் மட்டும்தான் இவ்வளவு கேவலமாக இருக்கிறேன்" என்று எண்ணி மிகவும் வேதனை அடைந்தான்.

ஞானி ஒருவர் கடற்கரை ஓரத்தில் ஒரு குடிலில் வசித்து வருவதாகவும் பலருக்கும் நல்வாழ்வுக்கு வழி காட்டி வருவதாகவும் கேள்விப்பட்டான்.

அவரை சந்தித்து தன்னுடைய நெடுநாள் பிரச்சினையான அவமான உணர்வுகளோடும் மனபாதிப்புகளோடும் போராடி வருவதை எடுத்து கூறி, "இதிலிருந்து மீளவே முடியவில்லை சுவாமி, நீங்கள் தான் எனக்கு உதவ வேண்டும்" என்று கண்ணீர் மல்க கேட்டுக்கொண்டான்.

ஞானியும் அவனுக்கு மனம் தெளிவு பெற பல விளக்கங்களை அளித்தார். ஆனாலும் அவனுக்கு ஞானியின் விளக்கம் எதுவும் புரியவில்லை.

அவன் "சுவாமி நீங்கள் எத்தனையோ பேர்களுடைய பிரச்சினைகளுக்கு வழி காட்டி இருக்கிறீர்கள். எனக்கு மட்டும் ஏன் சாமி புரியவில்லை. அப்படி நான் என்ன மோசமான கர்மாவை செய்துவிட்டேன்? என்று கேட்டு மிகவும் வருந்தினான்.

ஞானி, "சரியப்பா இன்று மிகவும் நேரம் ஆகிவிட்டது. இன்று இரவு ஒருநாள் இங்கு தங்கு. நாளை காலையில் உனக்கு விளக்கம் கிடைத்துவிடும் அதன் பிறகு வீடு திரும்பலாம்" என்றார்.

குடும்பஸ்தனுக்கு வேறு எந்த ஒரு வழியும் தெரியாதால் ஞானியின் வார்த்தையை கேட்டு அங்கேயே தங்கினான்.

கடற்கரைக்கு அருகில் ஞானியின் குடில் அமைந்திருந்ததால் இரவு முழுவதும் அலையின் ஓசை கேட்டுக்கொண்டே இருந்தது. ஞானி வழக்கம் போல் நன்றாக உறங்கி விட்டார். குடும்பஸ்தனுக்கு அவனது மன போராட்டத்தோடு சேர்ந்து அலையின் சப்தமும் இணைந்து கொண்டால் சரியாக தூங்க முடியவில்லை.

காலையில் ஞானி குடும்பஸ்தனையும் அழைத்துக் கொண்டு கடலில் குளிக்கச் சென்றார்.

அவனிடம் "நீ முதலில் கடலில் குளித்து விட்டு வா," என்றார்.

குடும்பஸ்தன் கடலில் இறங்கினான். கடலில் வரும் அலைகள் ஒவ்வொன்றும் பெரிது பெரிதாக வந்தன. அவன் ஒவ்வொரு அலையையும் எதிர்த்து குளிக்கச் சென்றான். அவன் அலையை எதிர்க்கும் தோறும் அலை அவனை கரையை நோக்கி தூக்கி எறிந்தது. இதனால் மிகவும் சோர்வுற்றான். ஆனாலும் ஒரு வழியாக குளித்து முடித்து கரை வந்து சேர்ந்தான்.

ஞானி இப்போது கடலில் இறங்கி குளிக்க தொடங்கினார். மார்புப் பகுதி முழுகும் வரை கடல் மட்டத்தில் இறங்கினார். அதற்குள் பெரியப் பெரிய அலைகளாக ஞானியை நோக்கி வந்தன. ஞானி ஒவ்வொரு முறை பெரிய அலை வரும் போது மட்டும் கடலில் தலை வணங்குவது போல் சற்றே தலை குனிந்து கொண்டார். கடல் அலைகள் அவரைக் கடந்து சென்றன. இவர் ஒரே இடத்தில் நின்று அரை மணி நேரமாக குளித்தார்.

எந்த அலையும் அவரை தூக்கி எறிய வில்லை. அவர் இருந்த இடத்தை விட்டு நகரவுமில்லை. இதை பார்த்துக் கொண்டிருந்த குடும்பஸ்தனுக்கு மிகவும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. ஞானி குடும்பஸ்தனை மீண்டும் ஒரு முறை குளிக்க அழைத்தார். குடும்பஸ்தனும் கடலில் இறங்கி ஞானிக்கு அருகில் வந்து நின்றபோது கடலின் மட்டம் அவன்மார்பு பகுதி வரை சூழ்ந்திருந்தது. அலைகள் வரும்போது மட்டும் அதனோடு போராடாமல் அதனை வணங்குவதுபோல் எப்படி கடலுக்குள் தலையை சற்றே குனிந்து கொள்வது என்பதை கற்றுக் கொடுத்தார் ஞானி.

குடும்பஸ்தன் தான் இருக்கும் இடத்திலிருந்து கொஞ்சமும் நகரவில்லை. தான் தூக்கி எறிய படவுமில்லை என்பதை உணர்ந்தான். பெரிய பெரிய அலைகளை அவனால் மிகவும் எளிதாக எதிர்கொள்ள முடிந்தது. எந்த உடல் அசதியும் இல்லாமல் சுகமாக குளித்தான்.

இருவரும் கரை ஏறினர்.

குடும்பஸ்தனை பார்த்து, "கடலின் அலையில் இருந்து என்ன பாடம் கற்றுக் கொண்டாய்?" என்று கேட்டார் ஞானி.

"அலைகளை எதிர்க்கக்கூடாது அவைகளுக்கு தலை வணங்க வேண்டும் என்பதை புரிந்து கொண்டேன்" என்றான் அவன்.

"இப்படித்தான் உன் பிரச்சினையான அவமான உணர்வுகளும் மன பாதிப்பு உணர்வுகளும் செயல்படுகின்றன" என்றார் ஞானி.

"அப்படியா புரியவில்லையே சுவாமி" என்றான்.

"பெரிய அலைகள் போல் தான் உன் மன பிரச்சினைகளும் உணர்வுகளும், அவைகளை எப்படியாவது வெற்றி கொள்ள வேண்டும் என்று நீ எதிர்த்து நிற்பதால் அந்த மனப்பாதிப்புகள் உன்னுடைய ஒட்டுமொத்த சக்தியையும் விரயமாக்கி விடுகின்றன.

கடல் என்றால் அலைகள் வரத்தான் செய்யும். அதுதான் இயற்கை. அதுபோல் மனம் என்றால் எல்லா உணர்வுகளும் எண்ணங்களும் வரத்தான் செய்யும் அதுதான் இயற்கை. அதனோடு சண்டை இடுவதால் தீர்வு கிடைக்க போவதில்லை. நமது சக்திதான் வீணாகும். அலைகள் எப்படி கடலில் இயற்கையோ, "அப்படி மனம் என்றால் எல்லா உணர்வுகளும் எண்ணங்களும் வருவது தான் இயற்கை" என்பதை புரிந்து கொள்ள வேண்டும். அலைகளை நம்மால் ஒருபோதும் வெல்ல முடியாது என்பதை விளங்கிக் கொள்வது போல் மனப்பாதிப்புகளை ஒருபோதும் நம்மால் எதிர்த்து வெல்லவே முடியாது என்பதை புரிந்து கொண்டு அதற்கு தலை வணங்குவதே அதனை கடப்பதற்கான வழி என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இதுவே ஞானம் " என்று கூறினார்.

தான் இது வரை மனதில் சேகரித்து வைத்திருந்த மன பாதிப்புகளின் தாக்கங்கள் அனைத்தும் வெடித்து சிதறியதாக தன்னுள் உணர்ந்தான்.

கடலில் இருந்து மட்டும் தான் கரை ஏறவில்லை. தன் நெடுநாள் மன பாதிப்பிலிருந்தும் தான் கரை ஏறி விட்டோம் என்பதை உணர்ந்து கொண்டான் குடும்பஸ்தான்.

ஞானியும் கடலும் அவனுக்கு கடவுளாகவே காட்சி அளித்தனர்.

"**கடல் அலையும் நம் மன அலையும் ஒன்றே அதை ஒருபோதும் நம்மால் எதிர்க்கவே முடியாது.**"

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555